*Special buses for ladies*

* 338 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to run "Ladies Special" buses within the City limits during peak hours?

THE HON. SRI R. VENKATARAMAN: No, Sir.

SRI K. SATTANATHA KARAYALAR: ஸிட்டியில் அதிகமாக கூட்டம் இருக்கக் கூடிய நேரத்தில் பெண்களுக்காக தனி பஸ்கள் அனுப்பினால் மாணவிகளும் அதேபோல் உத்தியோகத்துறையிலும் பெண்களும் ஏறி வர சௌகர்யமாகயிருக்கும். ஆகவே அதுபற்றி கவனிக்கப்படுமா? பஸ்களில் ஏறும்போது முதல் இடம் பெண்களுக்கு கொடுக்கப்பட வேண்டுமென்று உத்தரவு இடப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: பெண்களுக்கு 20 பர் செண்ட் ஸீட்ஸ் ரிசர்வ் செய்யப்பட்டிருக்கிறது. தனியாக peak-hour-ல் பஸ் விடுவது கஷ்டமாகயிருக்கும்.

*Sending farmers of the State to settle in Brazil*

* 339 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon the Minister for Home be pleased to state whether there is any proposal to send farmers from this State to settle in Brazil?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

SRI K. SATTANATHA KARAYALAR: ப்ரேஸிலிக்கு விவசாயிகளை அனுப்பலாம் என்று மத்திய அரசாங்கம் ஏதாவது ஒரு திட்டத்தை நமது அரசாங்கத்திற்கு அனுப்பியுள்ளதா? அதன்படி இதைப்பற்றி யோசித்தார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அத்தகைய தகவல் என்னிடம் ஒன்றுமில்லை.

SRI K. R. NALLASIVAM: துங்கபத்ரா, பக்ராநங்கல் போன்ற பிரதேசங்களில் 40 பர் செண்ட் தண்ணீர் விட்டும் கூட பாசனத்திற்கு வரவில்லை. ஆகவே இங்குள்ள விவசாயிகளை அங்கு குடியேற்றுவதற்கு அந்த மாகாண சர்க்காரோடு நமது சர்க்கார் தொடர்பு வைத்துக் கொண்டால் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்தக் கேள்வி, ப்ரேஸில் நாட்டுக்கு இங்குள்ள விவசாயிகளை அனுப்புவது பற்றியதாகும். இங்குள்ள விவசாயிகளை வேறு எந்த நாட்டிலும் குடியேற்றி வைக்கும் உத்தேசம் இல்லை.

SRI K. SATTANATHA KARAYALAR: ப்ரேஸில் நாட்டிற்கு வெளி மாகாணங்களில் இருந்து விவசாயிகளை அனுப்ப சில திட்டங்கள் வெளி வந்துள்ளது. அதேபோல் நம் மாகாணத்திலுள்ள விவசாயிகளும் அங்கு போக தயாராயிருந்தால் அப்படி அவர்களை அங்கு அனுப்பி வைக்க சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்குமா? மத்திய அரசாங்கத்திடம் அப்படியொரு திட்டமிருந்தால், அதுபற்றி பரிசிலிக்கப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதுபற்றிய தகவல் என்னிடம் இல்லை. சென்னை ராஜ்யத்திலுள்ள எந்த விவசாயியும் இந்த அரசாங்கத்தை அணுகி ப்ரேஸில் போக வசதி கோரவில்லை.